[13th February 1958

(*b*) the additional amount of revenue that will be made available to the State Government as a result of the recommendations of the Finance Commission in respect of (i) railway passenger fares, and (ii) Income-tax?

THE HON. SRI C. SUBRAMANIAM: (*a*) Rs. 64 lakhs for a full year; and

(*b*) (i) Rs. 64 lakhs; and

(ii) Rs. 94 lakhs with reference to the Budget Estimates for 1957–58.

* 82 *Q*.—SRI N. K. PALANISAMI: Will the Hon. the Minister for Finance be pleased to state the steps taken to get enhanced allocation from the proceeds of the Union Excise Duties and the Income-tax to this State from the Central Government?

THE HON. SRI C. SUBRAMANIAM: A memorandum was presented to the Finance Commission pressing the need for the increased share of the divisible pool to this State in respect of the Union Excise Duties and Income-tax.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR: Arising from the answer to (*b*), may I know whether the recommendations of the Commission are favourable to our State? How do they compare with previous years' recommendations?

THE HON. SRI C. SUBRAMANIAM: I have already stated that with reference to Railway passenger fares, we will be getting for a full year a share estimated about 64 lakhs of rupees. This is something new not available to the State till now. In the same way, we will get about 94 lakhs of rupees from out of income-tax revenues.

SRI A. VEDARATHNAM: நம்முடைய மாகாணம் முற்போக்கான மாகாணம் என்ற காரணத்தைக் குறிப்பிட்டு, நமக்கு கிடைக்கவேண்டிய உரிமைகளை கொடுக்க மத்திய அரசாங்கம் மறுத்திருக்கிறதா? அப்படியானால் நம்முடைய அரசாங்கம் என்ன முயற்சி எடுத்துக்கொண்டிருக்கிறது?

THE HON. SRI C. SUBRAMANIAM: இதை மத்திய அரசாங்கம் மறுத்ததாகக் கூறமுடியாது. ஏனென்றால், நிதிக் கமிஷன் செய்திருக்கும் சிபார்சுகளின் அடிப்படையிலே நிதிக் கமிஷனைப் பொறுத்தவரையில் அதன் அறிக்கையைப் படித்திருப்பவர்கள், சென்னை மாகாணம் முற்போக்கான மாகாணம் என்று கருதி, நம்மையும் பம்பாயையும் ஒன்றாக வைத்து சில சலுகைகள் மறுக்கப்பட்டிருக்கின்றன. நிதிக் கமிஷன் எந்த அடிப்படையில் அந்த முடிவுக்கு வந்தது என்பது சர்ச்சைக்குரிய வாதம்.

SRI M. P. SUBRAMANIAM: இப்பொழுது நம்முடைய நாட்டிலே திட்டங்கள் தாராளமாக எடுத்துக்கொள்ளவேண்டியிருக்கிற நிலைமையிலே, அதற்காக அடிக்கடி மத்திய சர்க்காரிடம் மான்யம் கேட்கின்ற நேரத்தில் வருமான வரி, எக்ஸைஸ் வரி போன்ற இனங்களில் ஏன் அதிகத் தொகை ஒதுக்கவேண்டுமென்று கேட்கக்கூடாது?

THE HON. SRI C. SUBRAMANIAM: இன்று செலவிலே இரண்டு இனங்கள் இருக்கின்றன என்பதை கனம் அங்கத்தினர்கள் மனதில் வைத்துக்கொள்ளவேண்டும். வருஷாவருஷம் செலவழிக்கக்கூடியது

13th February 1958]

ரெவென்யூ செலவினம். அபிவிருத்தித் திட்டங்களுக்காக மூலதனச் செலவு செய்வது "கேப்பிட்டல் எக்ஸ்பெண்டிச்சர்" ஆகும். இந்த இரண்டாவது இனம் சம்பந்தப்பட்டவரையில், இந்தியாவிலேயே எல்லா ராஜ்யங்களுக்கும் எவ்வளவு மூலதனம் செலவழிக்கப்படவேண்டுமென்பதை கணக்கிட்டு, அதற்குத் தகுந்தவாறு திட்டம் இடவேண்டியதாயிருக்கிறது. திட்டக் கமிஷன் எல்லாவற்றையும் பரிசீலனை செய்து, ஒவ்வொரு ராஜ்யமும் இவ்வளவு தொகை செலவு செய்யலாம் என்று கணக்கிட்டுப் பணம் ஒதுக்குகிறார்கள். நம்முடைய வரி இனங்களை வைத்துக்கொண்டு, நமக்கு வரக்கூடிய இந்தப் பங்குகளை வைத்துக்கொண்டு ரெவென்யூ செலவைச் சரிக்கட்டுவது நமது கடமை. இன்று செலவு என்று சொல்லும் போது, நம்முடைய ரெவென்யூ செலவைப் பொறுத்தவரையில், நம்முடைய ரெவென்யூ இனங்கள் போதிய அளவு இருப்பதாக நிதிக் கமிஷன் அபிப்பிராயப்படுகிறது.

SRI A. VEDARATHNAM : தொழில் துறையிலும் மற்றும் இதர துறைகளிலும் நாம் முற்போக்கு அடையாமல் இருந்தபோதிலும் பைனான்ஸ் கமிஷன் நம்மை பம்பாயுடன் சேர்த்து முற்போக்கு மாகாணங்களில் ஒன்றாகச் சேர்த்திருப்பதன் காரணத்தால் அவர்கள் சிபாரிசு முடிவானதா, அதற்குமேல் நாம் சொல்லிக்கொள்வதற்கு இடமில்லையா? இன்னும் நமக்கு சலுகைகள் காண்பிக்கவேண்டும் என்ற வகையில் என்ன முயற்சி எடுத்துக்கொண்டிருக்கிறார்கள் என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : இன்னும் ஐந்து வருஷங்கள் பொறுத்திருந்து அடுத்த ஐந்து வருஷத்திற்கு போடப்படும் திட்டத்தில் நமக்கு வேண்டியதைக் கேட்டுக்கொள்ள வேண்டியதுதான். இந்த ஐந்து வருஷத்திற்கு இப்பொழுது கொடுக்கப்பட்டிருப்பதை வைத்துக் கொண்டுதான் இருக்க வேண்டும். இப்பொழுது இருக்கக்கூடிய சிபாரிசின் அடிப்படையில்தான் நிதி ஒதுக்கப்பட்டிருக்கிறது.

SRI M. P. SUBRAMANIAM : காபிடல் எக்ஸ்பெண்டிசரை ஒவ்வொரு ராஜ்யத்திற்கு ஒவ்வொரு வருஷமும் என்ன செலவு செய்யப்படும் என்று ராஜ்யங்கள் முழுவதும் திட்டம் உருவாக்கி இருந்தால் ரெவன்யூ வருமானத்தை சட்ட ரீதியாக செலவு செய்யப்படுவது போன்று மூலதனத்தையும் சட்ட ரீதியாகப் பெறுவதற்கு நடவடிக்கை எடுத்துக்கொள்ளக்கூடாதா? அதன்படி மத்திய அரசாங்கத்தினிடமிருந்து தொகையை வாங்கக்கூடாதா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : முன்னே சொன்னேன் ரெவினியூ வருமானத்தை சட்ட ரீதியாக செலவு செய்லாம் என்றும், அப்படி செலவு செய்ய தொகை போதா விட்டால் வரி போட்டு பணத்தை வசூல் செய்ய அதன்படி சட்ட ரீதியாக செலவு செய்யலாம் என்று சொன்னேன். ஆனால் மூலதனத்தை சட்ட ரீதியாக செலவு செய்ய முடியாது. அதைப்பற்றி வருஷா வருஷம் பரிசீலனை செய்துதான் செலவு செய்யவேண்டும். வருஷா வருஷம் எவ்வளவு மூலதனம் கிடைக்கும் என்பதை நிர்ணயம் செய்து அந்த அடிப்படையில்தான் செய்யவேண்டியதாக இருக்கிறது. சட்ட ரீதியாக செலவு செய்யக்கூடிய காரியம் அல்ல.

SRI M. D. THIAGARAJA PILLAI : நமது மாகாணம் முற்போக்காக இருக்கிறது என்ற காரணத்தால் பைனான்ஸ் கமிஷன் நமக்குக் கொடுக்க வேண்டிய தொகையைக் கொடுக்காமல் குறைத்திருப்பதாகத் தெரிய வருகிறது. எவ்வளவு ரூபாய் அதன் காரணமாக நமது மாகாணத்திற்கு குறைவுபட்டிருக்கிறது என்பதைச் சொல்ல முடியுமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : முற்போக்கு மாகாணம் என்ற காரணத்தால் இரண்டு விதங்களில் நமக்கு நிதி ஒதுக்க வேண்டியது குறைந்திருக்கிறது. ஒன்று எக்சைஸ் ட்யூட்டியில் அதைப் பொறுத்த வரையில் 100-க்கு 90 பங்கு ஒவ்வொரு மாகாணத்திற்கும் கொடுக்கப்படுகிறது. அது ஜனத்தொகை அடிப்படையில் ஒதுக்கப்படுகிறது.

[13th February 1958

பாக்கி இருக்கக்கூடிய பத்து சத விகிதம் பிற்போக்கான மாகாணங்களுக்கு ஒதுக்கப்படுகிறது. அந்தப் பத்து சத விகிதம் தான் நமக்குக் கிடைக்க வில்லை. முற்போக்கு என்று கருதப்படுகின்ற பம்பாய், உத்தரப் பிரதேசம், சென்னை போன்ற இநத மூன்று மாகாணங்களுக்கும் அந்த பத்து சத விகிதம் ஒதுக்கப்படவில்லை. பாக்கி மாகாணங்களுக்கு அது ஒதுக்கப்படடிருக்கிறது. (2) பிற்போக்கான மாகாணங்களுக்கு ஒரு தொகை ஒதுக்கப்பட்டிருக்கிறது. 35 கோடி ரூபாய் இரண்டாவது திட்ட காலத்தில் அவர்களுடைய ரிவினியூ செலவுகளுக்காக சில மாகாணங்களுக்கு ஒதுக்கப் படுகின்றன. அதிலும் நமக்கு பங்கு கிடைக்கவில்லை. பம்பாய், உத்தரப் பிரதேசம், சென்னை தவிர மற்ற மாகாணங்களுக்கு அந்தத் தொகை கிடைத்திருக்கிறது.

SRI P. G. MANICKAM: நமது மாகாணம் கல்வித் துறையில் முற்போக்கு அடைந்திருக்கிறது என்ற காரணத்தைக் கருத்தில் கொண்டு நமக்கு கிடைக்கும்படியான மானியத்தை கழித்திருக்கிறார்களா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: இதைப்பற்றி ஜாஸ்தி பரிசீலனை பண்ணாமல் இருப்பதே நல்லது. ஆகையினால் இதை இத்துடன் விட்டு விடுவது நன்மையாக இருக்கும் என்று கருதுகிறேன்.

* 83 *Q.*—SRI A. A. RASHEED: Will the Hon. the Minister for Industries be pleased to state the State's share in the revenue of the Centre in respect of the excise duty on cloth, sugar and tobacco?

THE HON. SRI R. VENKATARAMAN: The 1957 Finance Commission has recommended that 25 per cent of the net proceeds in any financial year of the basic Union duties of excise on matches, tobacco (including manufactured tobacco), vegetable products, tea, coffee, sugar, paper and vegetable non-essential oils be paid to the States. 7·56 per cent of this amount will go to this State as its share. Excise duty on cloth has not been included in the above recommendation. No separate figures are however, available for sugar and tobacco.

2. As regards the additional duties of excise on sugar, tobacco and textiles recently imposed in lieu of sales-tax, the State's share is as follows :—

*Sugar.*—A guaranteed minimum of Rs. 60 lakhs plus 7·43 per cent of the balance if any, of the net proceeds of the additional excise duty on sugar.

*Tobacco.*—A guaranteed minimum of Rs. 57 lakhs plus 9·53 per cent of the balance, if any, of the net proceeds of the additional exicse duty on tobacco.

*Textiles.*—A guaranteed minimum of Rs. 168 lakhs plus 7·26 per cent of the balance, if any, of the net proceeds of the additional excise duty on textiles.

SRI A. A. RASHEED: What is the estimated revenue from the excise duty in our State?

THE HON SRI R. VENKATARAMAN: Is the additional excise duty in lieu of the Sales Tax? In that case it is a guaranteed minimum of 285 lakhs.